சமநிலையான ஊரக வளர்ச்சி

உலகளாவிய போட்டித்தன்மையில் மேம்பாடு

குறிப்பு

நகர்ப்புறங்களை நோக்கி தொழிலாளர்கள் குடியேறுவதைத் தடுக்கும்

2. **BMOs - வணிக மேலாண்மை நிறுவனங்கள் தொழில்கள் சங்கங்கள்**

- **ED Cells** - தொழில் அபிவிருத்தி கலங்கள்
- **NGOs** - அரசு சாரா நிறுவனங்கள்
- **STEPs** - அறிவியல் மற்றும் தொழில்நுட்ப தொழில்முனைவோர் பூங்காக்கள்
- **NIESBUD** - தொழில் தேசிய நிறுவனம் மற்றும் சிறு தொழில் வளர்ச்சி, நோய்டா
- **NIMSME** - குறு, சிறு மற்றும் நடுத்தரத் தொழில் தேசிய நிறுவனம்
- **TBIs** - செயற்கைமுறை தொழில்நுட்ப வணிகம்
- **IIE** - இந்திய தொழில்முனைவு நிறுவனம், குவஹாத்தி

**3. ஆலோசனை சேவைகளைப் பயன்படுத்துவதற்கு பல வழிகள் (காரணங்கள்) உள்ளன:**

1. ஒரு குறிப்பிட்ட சிக்கலை சரிசெய்தல்

நிபுணர் ஆலோசனை மற்றும் / அல்லது பக்கச்சார்பற்ற உதவியின் தேவை பல்வேறு சூழ்நிலைகளில் எழுகிறது. ஆலோசகர் இந்த சிக்கலைத் தீர்ப்பதற்கு பங்களிக்கலாம் அல்லது சிக்கலைக் குறைக்கவும், வணிகத்தில் அதன் எதிர்மறையான தாக்கங்களை குறைக்கவும் முடியும்.

2. வாடிக்கையாளர் திறன்களைப் பெறுதல் அல்லது விரிவுபடுத்துதல்

ஒரு குறிப்பிட்ட சிக்கலைச் சமாளிக்க போதுமான நேரம் மற்றும் ஊழியர்கள் இல்லையென்றால் வாடிக்கையாளர்கள் பெரும்பாலும் ஆலோசகர்களிடம் திரும்புவர். அனுபவமின்மை, தகுதி இல்லாமை அல்லது பிற திட்டங்களில் சுறுசுறுப்பாக இருப்பதால் ஊழியர்கள் பிரச்சினையை தீர்க்க முடியாது. சேவை வழங்கப்பட்ட பின்னர் ஆலோசகர் வாடிக்கையாளரின் அமைப்பை விட்டு வெளியேறுகிறார்.

வாடிக்கையாளர்கள் ஆலோசகர்களிடம் திரும்பி அவர்களின் உதவியை நாடுகிறார்கள், இது ஒரு தற்காலிக அடிப்படையில் அமைந்துள்ளது. எனவே புதிய பணியாளர்களை நியமிப்பது அவசியமில்லை.

3. தகவல் பெறுதல்

வணிகங்கள் தங்களின் திறனால் முடிவெடுத்தல் அல்லது அவர்களின் சொந்த வணிக நடவடிக்கைகளுக்காக புதிய, புதுப்பித்த தகவல்களைப் பெற வேண்டும். ஆலோசகர் பின்னர் ஒரு தகவலறிந்தவரின் செயல்பாட்டைச் செய்கிறார். வாடிக்கையாளரின் தகவலும் வழங்கப்படுகிறது. ஆலோசகர் அவருடைய / அவளுடைய புள்ளிவிவரப் தளத்தில் இருக்கிறார் அல்லது கிடைக்கக்கூடிய ஆதாரங்கள் அல்லது வாடிக்கையாளருக்கு அணுக முடியாத வழிகளில் இருந்து அவர் / அவள் அதைப் பெறுகிறார்கள். ஆலோசகர் வாடிக்கையாளருக்கு இந்தத் தகவலைப் பெறுவது மட்டுமல்லாமல், அதைச் செயலாக்கி மதிப்பீடு செய்யலாம்.

4. புதிய யோசனைகளின் தேவை

எந்த நிர்வாகமும் பணியாளர்களும் எந்தளவு நெருக்கமாக இணைக்கப்பட்டுள்ளனர் என்பதில் நிறுவனத்திற்கு சிக்கல் உள்ளது. அவர்களால் ஒரு பயனுள்ள தீர்வைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அத்தகைய சிக்கலைத் தீர்க்க தொடர்புடைய திறன்களைக் கொண்ட வெளிப்புற ஆலோசகர்கள் உதவுகிறார்கள். வாடிக்கையாளரின் அமைப்பில் பின்வாங்காமல் இருப்பதன் மூலம், பிரச்சினையின் அனைத்து சூழ்நிலைகளையும் ஊடுருவி, அதன் இயல்பு மற்றும் காரணங்களைத் தீர்மானிக்கவும் தீர்வுகளை பரிந்துரைக்கவும் இது முன்நிபந்தனைகளைக் கொண்டுள்ளது.

5. ஒரு பாரபட்சமற்ற மற்றும் நடுநிலையான கருத்தின் தேவை

இந்த உண்மை முந்தைய சூழ்நிலையுடன் ஓரளவு தொடர்புடையது, ஆனால் இது ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் கொள்கையை குறிக்கிறது. எடுத்துக்காட்டாக, ஒரு நிறுவனத்தின் நிர்வாகம் அதன் சொந்த ஊழியர்களால் சமர்ப்பிக்கப்பட்ட திட்டங்கள்

குறிப்பு

மற்றும் பரிந்துரைகள் நடுநிலையானவை அல்ல என்று நம்பலாம். எடுத்துக்காட்டாக, நிறுவனம் ஒரு தீவிரமான முடிவை எதிர்கொள்ளும் சூழ்நிலையிலும் அதன் சாத்தியமான நடவடிக்கையிலும் ஒரு ஆலோசகரிடமிருந்து ஒரு நடுநிலையான ஆலோசனை தேவைப்படலாம்.

## பகுதி - 14

## அரசாங்கத் திட்டங்கள்

**அமைப்பு:**

14.1 அறிமுகம்

14.2 அரசாங்கத் திட்டங்கள்

14.3 மத்திய அரசுத் திட்டங்கள்

14.3.1 பிரதமரின் வேலைவாய்ப்பு உருவாக்கும் திட்டம் (PMEGP)

14.3.2 குறு / சிறு உற்பத்தி நிறுவனங்கள் மற்றும்
ஏற்றுமதியாளர்களுக்கான சந்தை மேம்பாட்டு உதவித் திட்டம்

14.3.3 ராஜீவ் காந்தி உதயமி மித்ரா

14.3.4 தொழில்நுட்ப மேம்பாட்டுக்கான கடன் இணைப்பு மூலதன மானியத்
திட்டம்

14.3.5 தேசிய விருதுத் திட்டம்

14.3.6 1200 தொழில்முனைவு மன்றங்களை நடத்துவதற்கு
தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து பல்கலைக்கழகங்கள் / கல்லூரிகளை
ஆதரிக்கும் திட்டம்

14.3.7 மகளிர் தொழில்முனைவோருக்கான திட்டங்கள்

14.4 மாநில அளவிலான நிதி நிறுவனங்கள்

14.5 மாநில அரசு திட்டம்

14.5.1 தொழில்முனைவோர் மேம்பாட்டு நிறுவனம் (நுனுஐ)

14.5.2 பயிற்சி திட்டங்கள்

குறிப்பு



## 14.1 அறிமுகம்

இந்தியாவில் அதிக மக்கள் தொகை வளர்ச்சி உள்ளது.

**அரசு தொழில்முனைவுத் திட்டங்கள்**

வேலைவாய்ப்புகளை உருவாக்குவதைவிட முக்கியமானது எதுவுமில்லை. கடந்த இரண்டு ஆண்டுகளில், அதிகமான மக்கள் தங்கள் சொந்த SME-களைத் தொடங்க முயற்சி செய்தார்கள். கடந்த ஆண்டில் 8000க்கும் மேற்பட்ட தொடக்கங்களுடன், நம் நாட்டில் தொழில்

குறிப்பு

தொடங்குவதில் 108% அதிகரித்துள்ளது என அரசு சாரா தொழில் அமைப்பு நாஸ்காம் (NASSCOM) தெரிவித்துள்ளது. உலகளாவிய தொடக்க சுற்றுச்சூழல் அமைப்பில் அமெரிக்கா மற்றும் இங்கிலாந்துக்கு அடுத்தபடியாக இந்தியா இப்போது 3வது இடத்தில் உள்ளது.

அதிகமான மக்கள் தங்கள் சொந்தத் தொழில்களைத் தொடங்க ஊக்குவிப்பதற்காக அரசாங்கம் பல்வேறு தொடக்கத் திட்டங்களையும் கடன்களையும் அறிமுகப்படுத்தியுள்ளது. தொழில் தொடங்குவதும் மற்றும் வெற்றியும் வெளிநாட்டு முதலீடுகளை ஈர்ப்பதற்கும் பொருளாதாரத்தை உயர்த்துவதற்கும் காந்தங்களாக செயல்படுகின்றன. மேலும், நுகர்வோர் பொருட்களின் தேவை தொடர்ந்து அதிகரித்து வருவதால், அவற்றை நாட்டிற்குள் உற்பத்தி செய்வது மிகவும் சாத்தியமானதாகவும் லாபகரமானதாகவும் தெரிகிறது. உதாரணத்திற்கு, ஸ்மார்ட் போன்கள் மற்றும் இந்தியா உண்மையில் மொபைல் உற்பத்தி பிரிவுகளின் மையமாக மாறி வருகிறது.

## 14.2 அரசாங்கத் திட்டங்கள்

இந்தியாவில் வணிகங்களுக்கான அரசாங்கத் திட்டங்கள் முக்கியமாக, மானிய வட்டி விகிதத்தில் முதலீட்டிற்குத் தேவையான மூலதனத்தை வழங்குவதில் கவனம் செலுத்துகின்றன. இதன் விளைவாக மக்கள் தங்கள் கனவுகளை தங்கள் சொந்த முயற்சிகளால் நனவாக்க ஊக்குவிக்கப்படுகின்றனர். பல்வேறு திட்டங்கள் உள்ளன என்றாலும், மிகவும் சாத்தியமான பத்து தொடக்க திட்டங்கள் கீழே விளக்கப்பட்டுள்ளன:

1. **முத்ரா** (MUDRA) - மைக்ரோ யூனிட்ஸ் டெவலப்மென்ட் அண்ட் ரீ:.பைனன்ஸ் ஏஜென்சி அல்லது முத்ரா, குறு மற்றும் சிறு நிறுவனங்களுக்கு நிதி வழங்க இந்திய அரசாங்கத்தின் ஒரு முக்கிய திட்டமாகும். கடன் பெற அடைமானம் தேவையில்லை. உற்பத்தி, வர்த்தகம் மற்றும் அதனுடன் தொடர்புடைய விவசாய சேவைகளுக்கு இது பொருந்தும். இதில் 3 தொகுதிகள் உள்ளன. ஷிஷு (Shishu - 50,000 வரை கடன்), கிஷோர் (Kishor - 50,000 முதல் 5 லட்சம் வரை

கடன்) மற்றும் தருண் (Tarun - 5 லட்சம் முதல் 10 லட்சம் வரை கடன்).

2. **நபார்ட் (NABARD)** - வேளாண்மை மற்றும் ஊரக வளர்ச்சிக்காக உருவாக்கப்பட்ட வங்கி ஆகும். இந்த வங்கி விவசாயத்திற்கும் பிற குடிசை மற்றும் கிராமத் தொழில்களுக்கும் கடன் சலுகைகளை வழங்குவதை நோக்கமாகக் கொண்டுள்ளது. இது கிராமங்களில் கடன் வழங்கும் நிறுவனங்களுக்கும் நிதி வழங்குகிறது. உணவு பதப்படுத்தும் தொழிற்சாலைகள் மற்றும் ஒருங்கிணைந்த கிராமப்புற மேம்பாட்டுக்கான திட்டங்களுடன், கிராமப்புறங்களில் நிதி உதவியை நடைமுறைப்படுத்தவும் ஒழுங்குபடுத்தவும் ரிசர்வ் வங்கியுடன் இணைந்து நபார்ட் செயல்படுகிறது. பால் பொருட்களின் தொழில்முனைவோர் மேம்பாட்டுத் திட்டம் மூலம் வளர்ந்து வரும் தொழில்முனைவோருக்கு திட்ட செலவில் 90% வரை (குறைந்தபட்சம் 10 லட்சம் முதல் அதிகபட்சம் 150 லட்சம் வரை) வழங்குகிறது.

3. **கடன் உத்தரவாதத் திட்டம்** - குறு மற்றும் சிறு தொழில்களுக்கு வணிகக் கடன்களை வழங்குவதற்காக CGTMSE (குறு மற்றும் சிறு நிறுவனங்களுக்கான கடன் உத்தரவாத நிதி அறக்கட்டளை) பூஜ்ஜிய பிணையத்துடன் அமைக்கப்பட்டது. இதன் பொருள் புதிய மற்றும் வரவிருக்கும் தொடக்க நிறுவனங்கள் எந்தவொரு பாதுகாப்பையும் வழங்காமல் அதிக மானிய வட்டி விகிதத்தில் கடன்களைப் பெறலாம். SIDBI (சிறு தொழில்துறை மேம்பாட்டு வங்கி) உடன் இணைந்து செயல்படும் இந்த நிறுவனம், புதிய நிறுவனங்களை உயர்த்துவதற்கும், ஏற்கனவே உள்ள நிறுவனங்களை மேலும் வளர்ச்சியடையச் செய்வதற்கும் இந்த திட்டத்தின் கீழ் அதிகபட்சமாக 100 லட்சம் வரை வழங்குகிறது.

4. **ஸ்டாண்ட் அப் இந்தியா திட்டம்** - இது 2016-ல் தொடங்கப்பட்டது. மகளிர் தொழில்முனைவோருக்கும், எஸ்சி மற்றும் எஸ்டி சமூகங்களைச் சேர்ந்தவர்களுக்கும் இந்த திட்டம் செயல்படுத்தப்பட்டது. உற்பத்தி, வர்த்தகம் மற்றும் சேவை பிரிவுகளில்

குறிப்பு

வெளிநாடு துணிவுள்ள முதலீடு (Greenfield Ventures) முயற்சிகளுக்கு 10 லட்சம் முதல் 100 லட்சம் வரை கிடைக்கும்.

இந்த திட்டத்தின் கீழ், ஒவ்வொரு வங்கியும் குறைந்தது ஒரு மகளிர் தொழில்முனைவோருக்கும் ஒரு கிளைக்கு ஒரு எஸ்சி / எஸ்டி சமூகத்திற்கும் கடன் வழங்குவது கட்டாயமாகும். தனிநபர் அல்லாத வணிகங்களைப் பொறுத்தவரை, மகளிர் தொழில்முனைவோர் குறைந்தபட்சம் 51% பங்குகளை வைத்திருக்க வேண்டும். கடனை அதிகபட்ச மூலதனமாக 7 ஆண்டுகள் பணி மூலதனமாக வழங்க முடியும்.

5. **நியூஜென் ஐ.இ.டி.சி** (NewGen IEDC) - சுகாதார சேவைகள், இரசாயனங்கள், வன்பொருள், வானூர்தி / பாதுகாப்பு, ஐ.டி (IT), ஏ.ஆர் / வி.ஆர் (AR/VR), கட்டுமானம், வடிவமைப்பு, உணவு மற்றும் பானங்கள், ஜவுளி, நானோ தொழில்நுட்பம் மற்றும் புதுப்பிக்கத்தக்க மற்றும் அல்லாத தொழில்களுக்கு நியூஜென் கண்டுபிடிப்பு மற்றும் தொழில்முனைவோர் மேம்பாட்டு மையம்/அமைப்பு உதவி செய்கிறது. இந்த அமைப்பு தொடக்க அலகுகளுக்கு நிதியளிப்பதற்கு 25 லட்சம் வரை ஒரு முறை மீண்டும் வராத / தொடர்ந்து நிகழாத கடனை இது வழங்குகிறது.

6. **ஏ.ஐ.சி** (AIC) **அடல் புதுமை பணி** - அடல் செயற்கைமுறை மையங்கள் (AIC) ஒவ்வொரு ஏ.ஐ.சிக்கும் ரூ.10 கோடி வழங்குகிறது. மானியத்தின் காலம் அதிகபட்சம் 5 ஆண்டுகள் ஆகும். இது NITI aayog-ன் கீழ் அமைக்கப்பட்டுள்ளது. இரசாயனங்கள், தொழில்நுட்ப வன்பொருள், சுகாதாரம் மற்றும் அறிவியல், ஏரோநாட்டிக்ஸ் / விண்வெளி மற்றும் பாதுகாப்பு, வேளாண்மை, AI, AR / VR (பெரிதாக்கப்பட்ட + பார்த்தறியக்கூடிய), தானியங்கி போன்ற துறைகளில் பல்வேறு தொடக்கங்களுக்கு நிதி உதவி மற்றும் உள்கட்டமைப்பு உதவிகளை வழங்குவதே AIC-களின் நோக்கம் ஆகும். தொலைத்தொடர்பு மற்றும் இணையதள இணைப்பு, கட்டுமானம், வடிவமைப்பு, புதுப்பிக்க முடியாத ஆற்றல், புதுப்பிக்கத்தக்க ஆற்றல், பசுமை தொழில்நுட்பம், ஃபிண்டெக் (fintech), வலையமைப்பு சார்ந்த பொருட்கள், நானோ தொழில்நுட்பம்

குறிப்பு

மற்றும் உணவு மற்றும் குளிர்பானங்கள் போன்றவற்றை உள்ளடக்கி உள்ளது. பயிற்சி மற்றும் தொழில்முனைவோர் பட்டறைகளை நடத்துதல், உத்வேகம் தரும் திட்டங்களை ஒழுங்கமைத்தல், தேவையான உள்கட்டமைப்பு, முன்மாதிரி அல்லது ஆராய்ச்சி வசதிகளை அணுகுவது, அத்துடன் தொழில்முனைவோருக்கு வழிகாட்ட வழிகாட்டிகளின் குழுவை உருவாக்குதல் ஆகியவை AIC மூலம் செய்ய எதிர்பார்க்கப்படும் சில பணிகள் ஆகும்.

7. **சி.எல்.சி.எஸ்.எஸ்** (CLCSS) – MSME-ன் கீழ், கடன் இணைக்கப்பட்ட மூலதன மானியத் திட்டம் என்பது அதிநவீன உபகரணங்களுடன் தங்கள் இயந்திரங்களை மேம்படுத்திய உற்பத்தி பிரிவுகளுக்கு மானியத்தை வழங்குவதற்கான ஒரு வழியாகும். இந்தத் திட்டம் உற்பத்தி அலகுகளை சமீபத்திய உபகரணங்களை வாங்க ஊக்குவிப்பதற்கும், தொழில்நுட்பத்தை மேம்படுத்துவதற்கும் உதவுகிறது.

8. **ஸ்மைல்** (SMILE) - குறு, சிறு மற்றும் நடுத்தர நிறுவனங்களுக்கான எஸ்ஐடிபிஐ, (SIDBI) மேக் இன் இந்தியா, மென்மையான கடன் நிதி ஆகியவற்றை MSME அலகுகளுக்கு நியாயமான அடிப்படையில் வழங்குகிறது. ஒரு பிரிவின் கடன்-சமநிலை விகிதத்தை பூர்த்தி செய்ய அல்லது அதன் வளர்ச்சி மற்றும் விரிவாக்கத்திற்கு உதவுகிறது. கடன் அதிகபட்சம் 3 ஆண்டுகளுக்கு பொருந்தும். வழங்கப்பட்ட தொகை, கீழ் வரும் பிரிவில் வேறுபடுகிறது, பொதுவான பிரிவுக்கு 10% அல்லது அதிகபட்சம் 20 லட்சம், மற்றும் எஸ்சி / எஸ்டி, மாற்றுத்திறனாளிகள் மற்றும் பெண்களுக்கு 15% அல்லது அதிகபட்சம் 30 லட்சம்.

9. **மேல்தள சூரியசக்தி பி.வி. (PV) மின் திட்டங்களுக்கான கடன்** - இது இந்திய புதுப்பிக்கத்தக்க எரிசக்தி மேம்பாட்டு நிறுவனம் (IREDA) தலைமையிலானது ஆகும். இந்த திட்டம் மேல்தளங்களில் சூரியசக்தி பி.வி திட்டங்களுக்கு நிதியுதவி வழங்குவதன் மூலம் புதுப்பிக்கத்தக்க எரிசக்தி வளர்ச்சியை ஊக்குவிக்கிறது. திட்ட செலவில் 70% IREDA-வால் வழங்கப்படுகிறது. மீதமுள்ள 30% தொகையை தொழில்முனைவோர் பங்களிப்பார். சில திட்டங்களில், சிறந்த சாதனை

குறிப்பு

மூலம் பதிவு பெற்ற துறை அதிக நன்மைகள் மற்றும் அதிக உற்பத்தித்திறன் ஆகியவற்றைக் கொண்டால், ஐ.ஆர்.இ.டி.ஏ கடன் தொகையை திட்ட செலவில் 75% வரை நீட்டிக்கக்கூடும். கடனை அதிகபட்சம் 9 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்த வேண்டும்.

10. (MSIPS) - மாற்றியமைக்கப்பட்ட சிறப்பு ஊக்கத் தொகுப்பு திட்டம்:

தொழில்நுட்ப வன்பொருள், ஐஓடி (IoT), தானியங்கி, புதுப்பிக்கத்தக்க மற்றும் புதுப்பிக்க முடியாத எரிசக்தி ஆதாரங்கள், நானோ தொழில்நுட்பம், பசுமை தொழில்நுட்பம் மற்றும் விண்வெளி மற்றும் பாதுகாப்புத் தொழில்கள் ஆகிய துறைகளில் உற்பத்தி மற்றும் மின்னணு பிரிவுகளுக்கு மூலதன மானியங்களை வழங்குகிறது. இந்த திட்டத்தின் கீழ், உற்பத்தி மற்றும் மின்னணுவியல் துறையில் வணிக பிரிவுகளுக்கு, SEZ-ல் 20% மூலதன மானியத்திற்கும், SEZ அல்லாதவற்றில் 25% வழங்கப்படுகிறது.

## 14.3 மத்திய அரசுத் திட்டங்கள்

இந்தியாவில் உள்ள மக்களின் நலனுக்காக பின்வரும் திட்டங்கள் மத்திய அரசால் செயல்படுத்தப்படுகின்றன.

### 14.3.1 பிரதமரின் வேலைவாய்ப்பை உருவாக்கும் திட்டம் (PMEGP)

பிரதமரின் வேலைவாய்ப்பை உருவாக்கும் திட்டம் (PMEGP) எனப்படும் புதிய கடன் வழங்கும் மானிய திட்டத்திற்கு இந்திய அரசு ஒப்புதல் அளித்துள்ளது. 31.03.2008 வரை செயல்பாட்டில் இருந்த இரண்டு திட்டங்களை குறிப்பாக பிரதமரின் ரோஜ்கர் (PMRY) மற்றும் கிராமப்புற வேலைவாய்ப்பு உருவாக்கும் திட்டத்தை (REGP) இணைப்பதன் மூலம் இது செய்யப்பட்டுள்ளது. கிராமப்புற மற்றும் பெருநகரங்களில் சிறு நிறுவனங்களை நிறுவுவதன் மூலம் வேலை வாய்ப்புகளை உருவாக்குவது என்பதே இதன் நோக்கம் ஆகும். PMEGP ஒரு மத்திய துறை திட்டமாக செயல்படும், இது குறு, சிறு மற்றும்

நடுத்தர நிறுவனங்களின் அமைச்சகத்தால் (MoMSME) நேரடியாக நிர்வகிக்கப்பட்டு கண்காணிக்கப்படும். இந்த திட்டம் காதி மற்றும் கிராம தொழில்துறை ஆணையத்தால் (KVIC) செயல்படுத்தப்பட்டு நிர்வகிக்கப்படும். இது MSME அமைச்சகத்தின் நிர்வாக கட்டுப்பாட்டின் கீழ் உள்ள ஒரு சட்டரீதியான அமைப்பாகும். இது தேசிய அளவில் ஒற்றை நோடல் நிறுவனமாக உள்ளது. அதேசமயம், மாநில KVIC இயங்கும் மையங்கள், மாநில காதி மற்றும் கிராம தொழில் வாரியங்கள் KVIB மற்றும் மாவட்ட தொழில் மையங்கள் (DICs) மற்றும் வங்கிகளும் இந்த திட்டத்தை செயல்படுத்தும். இந்த திட்டத்தின் கீழ் அரசு மானியம் அங்கீகரிக்கப்பட்ட வங்கிகள், KVIC மூலம் தொழில்முனைவோருக்கு அவர்களின் வங்கி கணக்குகளில் செலுத்தப்படும்.

பிரதமரின் வேலைவாய்ப்பை உருவாக்கும் திட்டத்தின் குறிக்கோள்கள் (PMEGP):

1. இத்திட்டத்தின் முக்கிய நோக்கம் கிராமப்புற மற்றும் நாட்டின் நகர்ப்புறங்களில் மென்மேலும் வேலை வாய்ப்புகளை உருவாக்குவதாகும். இந்த நோக்கத்திற்காக, புதிய சுய வேலைவாய்ப்பு முயற்சிகள் / திட்டங்கள் / குறு நிறுவனங்களை அமைப்பதும் அடங்கும்.

2. பரவலாக தனிமைப்படுத்தப்பட்ட பாரம்பரிய கிராமப்புற மற்றும் நகர்ப்புற இளைஞர்களை வேலைவாய்ப்பு தேடுவதையும் அவர்களுக்கு சுய வேலை வாய்ப்புகளை வழங்குவதையும் இது நோக்கமாகக் கொண்டுள்ளது.

3. நாட்டின் பாரம்பரிய கிராமப்புற மற்றும் நகர்ப்புற வேலையற்ற இளைஞர்களில் பெரும் பகுதியினருக்கு நிலையான வேலைவாய்ப்பை வழங்க அரசாங்கம் விரும்புகிறது.

4. இது கிராமப்புற மற்றும் நகர்ப்புற இளைஞர்களின் வருவாய் திறனை அதிகரிக்கும் முயற்சியாகும்.

பயனாளிகளின் தகுதிக்கான நிபந்தனைகள்:

1. வயது 18 வயதுக்கு மேல் இருக்க வேண்டும்.

2. PMEGP-ன் கீழ் திட்டங்களை அமைப்பதற்கான வருமான வரம்பு இல்லை.

குறிப்பு

3. உற்பத்தித் துறைக்கு ரூ.10 லட்சம், வணிக / சேவை துறைக்கு 5 லட்சம் போன்ற மேலான திட்டங்களை அமைப்பதற்காக பயனாளிகள் குறைந்தபட்சம் 8ம் வகுப்பு வரை படித்திருக்க வேண்டும். குறிப்பாக PMEGP-ன் கீழ் புதிய திட்டங்கள் அனுமதிக்கப்பட்டால் மட்டுமே திட்டத்தின் கீழ் உதவி வழங்கப்படுகிறது.

4. பிபிஎல் (BPL) நிறுவனத்தைச் சேர்ந்தவர்களுடன் சுய உதவிக்குழுக்களும் PMEGP-ன் கீழ் நிதியுதவிக்கு தகுதியுடையவர்கள், அவர்கள் வேறு எந்த திட்டத்தின் கீழும் நன்மைகளைப் பெறக்கூடாது.

5. நிறுவனங்கள், சங்கங்கள் பதிவு சட்டம் 1860-ன் கீழ் பதிவு செய்யப்பட வேண்டும்.

6. உற்பத்தி கூட்டுறவு சங்கங்கள் மற்றும் தொண்டு அறக்கட்டளைகளும் இத்திட்டத்திற்கு தகுதியானவை.

### 14.3.2 குறு / சிறு உற்பத்தி நிறுவனங்கள் மற்றும் குறு / சிறு ஏற்றுமத ியாளர்களுக்கான சந்தை மேம்பாட்டு உதவித் திட்டம்

MSME இந்தியா விற்பனைக் கண்காட்சிப்பிரிவின் கீழ் சர்வதேச வர்த்தக கண்காட்சிகள் / கண்காட்சிகளில் சிறு மற்றும் குறு நிறுவனங்களை தயாரிப்பதன் மூலம் இந்த திட்டம் நிதி உதவியை வழங்குகிறது. இது தொழில்துறை சங்கங்கள் / ஏற்றுமதி ஊக்குவிப்பு சங்கங்கள் / இந்திய ஏற்றுமதி அமைப்பின் கூட்டமைப்பு ஆகியவற்றால் செய்யப்படும் துறை சார்ந்த சந்தை ஆய்வுகளுக்கான நிதியையும் வழங்குகிறது. தேக்கநிலை வழக்குகளைத் தொடங்கும் எஸ்எஸ்ஐ (SSI) சங்கங்கள் இந்த திட்டத்தின் கீழ் உள்ளன.

**குறிக்கோள்கள்**

1. இந்த திட்டம் சிறு மற்றும் குறு ஏற்றுமதியாளர்களை வெளிநாட்டிலுள்ள சந்தைகளைத் தட்டவும் வளர்க்கவும் ஊக்குவிப்பதை நோக்கமாகக் கொண்டுள்ளது.

2. சிறு / குறு உற்பத்தி நிறுவனங்களின் பிரதிநிதிகளை சர்வதேச வர்த்தக கண்காட்சிகள் / கண்காட்சிகளில் MSME இந்தியா விற்பனைப்பிரிவின் கீழ் பங்கேற்பதை ஊக்குவிக்க அரசு விரும்புகிறது.

3. மேலும் இந்தத் திட்டம் பட்டைக்குறி படிப்பான் குறியீட்டைப் பெரிய அளவில் செயல்படுத்துவதை பிரபலப்படுத்துவதையும் நோக்கமாகக் கொண்டுள்ளது.

குறிப்பு

**பயிற்சி நிறுவனங்களுக்கு உதவி செய்வதற்கான திட்டம்**

இந்த திட்டம் புதிய நிறுவனங்களை (EDIs) நிறுவுவதற்கும், தற்போதுள்ள EDI-களின் உள்கட்டமைப்பை வலுப்படுத்துவதற்கும் நிதி உதவி வழங்குகிறது. உள்;ர் தொழில்முனைவோரை மேம்படுத்துவதும், அதன் மூலம் புதிய குறு மற்றும் சிறு நிறுவனங்களை அபிவிருத்தி செய்வதும், கிராமப்புற மற்றும் நகர்ப்புறங்களில் சுயதொழில் உருவாக்குவதும், புதிய தலைமுறை தொழில்முனைவோருக்கு நிறுவனங்களை அமைப்பதில் பயிற்சியளிப்பதன் மூலம் இத்திட்டத்தின் முக்கிய நோக்கங்கள் உள்ளன. உள்கட்டமைப்பு மேம்பாட்டிற்காக உதவி மூலதனம் மானிய வடிவில் இருக்கும்.

**14.3.3 ராஜீவ் காந்தி உதயமி மித்ரா**

வடகிழக்கு பகுதிகளில் உள்ள தொழில்முனைவோருக்கு உதவி வழங்குவதற்காக மத்திய குறு, சிறு மற்றும் நடுத்தர தொழில் அமைச்சகமானது ராஜீவ் காந்தி உதயமி மித்ராவை அறிமுகப்படுத்தியது. இந்த திட்டத்தின் கீழ், வடகிழக்கு பகுதியைச் சேர்ந்த பயனாளிகள் மற்றும் எஸ்சி / எஸ்டி / உடல் ஊனமுற்றோர் / மகளிர் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள், குறு உற்பத்தி நிறுவனங்களின் சேவை நிறுவனங்களை நிறுவுவதற்கு பங்களிக்க வேண்டியதில்லை.

நிறுவனத்தை . உருவாக்குவதற்குத் தேவையான பல்வேறு சம்பிரதாயங்களை நிறைவு செய்வதில் உதயமி மித்ரா மூலம் தொழில்முனைவோருக்கு உதவி வழங்குவதே . இத்திட்டத்தின் நோக்கமாகும். திட்ட அறிக்கையைத் தயாரித்தல், நிதி ஏற்பாடு செய்தல், தொழில்நுட்பத்தைப் பயன்படுத்துதல் மற்றும் சந்தைப்படுத்துதல், இயந்திரங்களுடன் ஆலை அமைத்தல் மற்றும் ஒப்புதல்கள், அனுமதிகள் மற்றும் என்.ஓ.சி-களை (NOC) தேவைப்படும் போது பெறுதல் ஆகியவை

குறிப்பு

இதில் அடங்கும். புதிய குறு மற்றும் சிறு நிறுவனங்களை நிறுவுவதற்கு இறுதி வரை ஆதரவை வழங்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

ராஜீவ் காந்தி உதயமி மித்ராவின் (RGUMY) குறிக்கோள்:

தேர்ந்தெடுக்கப்பட்ட முன்னணி ஏஜென்சிகள் மூலம் ஏற்கனவே இடிபி / எஸ்டிபி / ஈஎஸ்டிபி (EDP/SDP/ESDP) அல்லது ஐடிஐ-களிடமிருந்து (ITI) தொழிற்பயிற்சி முடித்த புதிய தலைமுறை தொழில்முனைவோருக்கு ஆதரவும் உதவியும் வழங்குவதே இத்திட்டத்தின் நோக்கம் ஆகும். புதிய தலைமுறை தொழில்முனைவோருக்கான உதவி மற்றும் ஆதரவு ஒழுங்கமைத்தலுக்காக இந்த திட்டத்தின் கீழ், நிதி உதவி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள முன்னணி முகவர், அதாவது உதயமி மித்ரா, மூலம் வழங்கப்படுகிறது.

### 14.3.4 தொழில்நுட்ப மேம்பாட்டுக்கான கடன் இணைப்பு மூலதன மானியத் திட்டம்

சிறிய, காதி, கிராமம் மற்றும் நாணயத் தொழில்துறை அலகுகள் உள்ளிட்ட எஸ்.எஸ்.ஐ(SSI) அலகுகளுக்கு மூலதன மானியத்தை வழங்குவதன் மூலம் தொழில்நுட்பத்தை மேம்படுத்துவதற்கு இந்த திட்டம் உதவியாக உள்ளது. அவற்றின் உற்பத்தி சாதனங்களை நவீனமயமாக்குவதற்கும் நிறுவன கடனை அவர்கள் பெறலாம்.

இந்தத் திட்டத்தின் திருத்தத்திற்கு முன்னர் எஸ்.எஸ்.ஐ (SSI) பிரிவுகளுக்கு சிறு பிரிவுகள் உட்பட 12 சதவீத மூலதன மானியத்தை வழங்கியது. திட்டத்தின் கீழ் அங்கீகரிக்கப்பட்ட, தேர்ந்தெடுக்கப்பட்ட துணைத் துறைகள் / தயாரிப்புகளில் நன்கு நிறுவப்பட்ட மற்றும் மேம்பட்ட தொழில்நுட்பத்தைத் தூண்டுவதற்காக அவர்கள் பெற்ற நிறுவன நிதியை பயன்படுத்தலாம். முந்தைய திட்டத்தின் கீழ் கணக்கிடப்பட்ட தகுதிவாய்ந்த மானியம் ரூ.40 லட்சத்திற்கு மிகாமல் உண்மையான கடன் தொகையை அடிப்படையாகக் கொண்டது.

எஸ்.எஸ்.ஐ (SSI) பிரிவுகளில் பெரும் சதவீதம் காலாவதியான தொழில்நுட்பம் மற்றும் ஆலை மற்றும் இயந்திரங்களுடன் தொடர்கிறது. ஏனெனில் போதிய முதலீடு மற்றும் விழிப்புணர்வு இல்லாததால்,

குறிப்பு

பொருளாதாரத்தின் அதிகரித்துவரும் போட்டியுடன், SSI பிரிவுகளின் கீழ் தொழிலில் தொடர்ந்து போட்டிபோடுதல் மற்றும் வளர்ச்சியும் அவற்றின் நவீனமயமாக்கல் மற்றும் தொழில்நுட்ப மேம்பாடு ஆகியவற்றைப் பொறுத்தது. சிறு நிறுவனங்களுக்கு உற்பத்தி மற்றும் அதனுடன் தொடர்புடைய ஆலை மற்றும் இயந்திரங்கள் இரண்டையும் மேம்படுத்துதல் அவசியம்.

இதை அடிப்படையாகக் கொண்டுள்ள இந்த திட்டத்தின் கீழ் கடன்களுக்கான உச்சவரம்பு ரூ.40 லட்சம் முதல் ரூ.1 கோடி மற்றும் மானிய விகிதம் 12 சதவீதத்திலிருந்து 15 சதவீதமாக உள்ளது.

**14.3.5 தேசிய விருதுத் திட்டம்**

இந்தியாவில் குறு, சிறு மற்றும் நடுத்தர நிறுவனங்கள் (MSMEs) கடந்த சில பத்தாண்டுகளாக மகத்தான வளர்ச்சியைக் கண்டன. தரமான உற்பத்தி, ஏற்றுமதி-இறக்குமதி, நவீனமயமாக்கல், தயாரிப்பு மேம்பாடு ஆகியவற்றில் எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்ட குறிப்பிடத்தக்க வளர்ச்சியை அடைந்தது. MSMEs கீழுள்ள தொழில்முனைவோரின் முயற்சிகள் முன்னர் இறக்குமதி செய்யப்பட்ட ஏராளமான பொருட்களை உற்பத்தி செய்வதை சாத்தியமாக்கியுள்ளன. சில சந்தர்ப்பங்களில் அவ்வாறு தயாரிக்கப்படும் புதிய வகைகள் கூடுதல் பண்புகளைக் கொண்டிருக்கின்றன. மேலும் அவை பயனர் நட்பாகவும் இருக்கின்றன. MSMEs-களின் தொழில்முனைவோரின் தொலைநோக்கு பார்வையால் இவை அனைத்தும் சாத்தியமாகியுள்ளன.

**14.3.6 1200 தொழில்முனைவு மன்றங்களை நடத்துவதற்கு தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து பல்கலைக்கழகங்கள் / கல்லூரிகளை ஆதரிக்கும் திட்டம்**

தொழில்முனைவோர் மன்றங்களை நடத்துவதற்கு ஐந்து பல்கலைக்கழகங்களை ஆதரிப்பதே இந்த திட்டத்தின் நோக்கமாகும். ஒவ்வொரு பல்கலைக்கழகமும் வடக்கு, மேற்கு, கிழக்கு, தெற்கு மற்றும் வடகிழக்கு பிராந்தியத்தைச் சேர்ந்ததாக இருக்க வேண்டும். ஒவ்வொரு பல்கலைக்கழகமும் ஆண்டுக்கு 240 மன்றக் கூட்டங்களை நடத்த

குறிப்பு

வேண்டும். ஒவ்வொரு மன்றத்திலும் 50 தொழில்முனைவோர் உறுப்பினராக இருக்க வேண்டும். 5 ஆண்டு காலப்பகுதியில், 3 லட்சம் தொழில்முனைவோர் பயனடைய வேண்டும்.

**திட்டத்தின் குறிக்கோள்கள்**

தொழில்முனைவோரை ஊக்குவிப்பதே இந்த திட்டத்தின் முக்கிய நோக்கம் ஆகும். மேலும், இந்தத் திட்டம் தொழில்முனைவோர், பல்கலைக்கழகங்கள் மற்றும் MSME-மேம்பாட்டு நிறுவனங்கள் (MSME-DI) ஆகியவற்றை ஒன்றிணைப்பதில் மிக முக்கியமான பங்கு வகிக்கிறது. இந்த திட்டத்தின் காரணமாக தொழில்முனைவோர் ஒன்றிணைந்து அவர்களின் பொதுவான பிரச்சினைகளை தீர்க்க முடியும்.

**14.3.7 மகளிர் தொழில்முனைவோருக்கான திட்டங்கள்**

**அ. மஹிலா உத்யாமி (MUY):** SSI -துறையில் திட்டங்களைத் தொடங்க விரும்பும் மகளிர் தொழில்முனைவோருக்கு தொடக்க (விதைபோன்ற பொருள் கொண்ட) மூலமுதலீடு (Seed Capital) உதவியை வழங்குவதற்காக ஐ.டி.பி.ஐ (IDBI) இந்த திட்டத்தின் கீழ் ரூ.5 கோடி நிதிய மூலதனத்துடன்(Corpus Fund) சிறப்பு நிதியை அமைத்துள்ளது. இந்த திட்டத்தை SIDBI செயல்படுத்துகிறது. 51% பங்குகளை மகளிர் நிர்வகிக்க வேண்டும்.

**ஆ. ஸ்ரீ சக்தி தொகுப்பு (SBI):** இந்த திட்டத்தின் கீழ், ஈடிபிஎஸ் பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்டு மகளிர் தொழில்முனைவோருக்காக நடத்தப்படுகிறது. மேலும், இணை பாதுகாப்பு இல்லாமல் ரூ.25,000 வழங்கப்படுகிறது.

**இ. பிரியா தர்ஷினி:** இதை பாங்க் ஆப் இந்தியா செயல்படுத்துகிறது. மகளிர் தொழில்முனைவோருக்கு நிதி உதவி வழங்குகிறது.

- திட்டத்தில் அதிகபட்ச கடன் தொகை - கால கடன் 2 லட்சம் மற்றும் மூலதனம் 1 லட்சம் வரை உள்ளது.

• வாங்கிய நிதிக்கான சொத்துக்களை பிணையமாக பாதுகாப்பாக உள்ளன.

• திருப்பிச் செலுத்தும் காலம் 3-5 ஆண்டுகள் ஆகும்.

• இறுதிநிலைப் பணம் 20% நடவடிக்கை வகையை சார்ந்துள்ளது.

இந்த திட்டங்களைத் தவிர, பி.எம்.ஆர்.ஒய் (PMRY), செபப் (SEPUP), (நகர்ப்புற ஏழைகளுக்கான சுய வேலைவாய்ப்பு திட்டம்), எஸ்.ஜி.எஸ்.ஒய் (SGSY), ஐ.ஆர்.டி.பி (IRDP) மற்றும் ராஷ்டிரிய மகில கோஷ் போன்ற பிற திட்டங்கள் மகளிர் தொழில்முனைவோருக்கு நிதி உதவி வழங்க உதவுகின்றன. அரசாங்க சலுகைகள் இரண்டு வகையான மானியங்கள்.

• முதலீட்டு மானியம் வழங்குவதன் மூலம் அதிகமான நிறுவனங்களை உருவாக்குதல். மூலதன முதலீட்டு மானியம், போக்குவரத்து மானியம், மின் ஜெனரேட்டர் மானியம் மற்றும் மகளிர் தொழில்முனைவோருக்கு சமூக மானியம் போன்ற பல்வேறு மானியங்கள் இதில் அடங்கும்.

• பிற மானியங்களில் ஏற்றுமதி / இறக்குமதி மானியம், வரி மானியம், கலால் மானியம் / Duty Exemption(கடமை விலக்கு திட்டங்கள் ஏற்றுமதி உற்பத்திக்கு தேவையான உள்ளீடுகளை வரி விலக்கு செய்ய உதவுகின்றன), மற்றும் தொழில்நுட்ப மேம்பாட்டுக்கான மூலதன மானியம் ஆகியவை அடங்கும்.

## 14.4 மாநில அளவிலான நிதி நிறுவனங்கள்

**கைத்தொழில் இயக்குநரகம் (DIs)**

மாநில அளவில், கமிஷனர் / தொழில்துறை இயக்குநர் சிறிய அளவிலான, குடிசை, நடுத்தர மற்றும் பெரிய அளவிலான தொழில்களை மேம்படுத்துவதற்கும் உயர்த்துவதற்கும் கொள்கைகளை செயல்படுத்துகிறார். மத்திய அரசு கொள்கைகள் SSI துறைக்கான வழிகாட்டுதல்களாக செயல்படுகின்றன, ஆனால் ஒவ்வொரு மாநிலமும் அதன் சொந்த கொள்கை மற்றும் சலுகைகளின் தொகுப்பை

குறிப்பு

உருவாக்குகின்றன. அனைத்து மாநிலங்கள் / யூ.டி.க்களில் (UTs) உள்ள கமிஷனர் / கைத்தொழில் இயக்குநர், கள அலுவலகங்களின் செயல்பாடுகளை மேற்பார்வையிடுகிறார், அதாவது மாவட்ட தொழில்துறை மையங்கள் (DICs) மூலம் அந்தந்த மாவட்ட அளவில் நடைபெறுகிறது.

**மாவட்ட தொழில்துறை மையங்கள் (DICs)**

பெரிய நகரங்கள் மற்றும் மாநில தலைநகரங்களைத் தாண்டி சிறிய அளவிலான மற்றும் குடிசைத் தொழில்களை மாவட்ட தலைமையகத்திற்கு விரிவுபடுத்துவதற்காக, DIC திட்டம் 1978 மே மாதம் மைய நிதியுதவி திட்டமாக தொடங்கப்பட்டது. குறிப்பாக கிராமப்புற மற்றும் பின்தங்கிய பகுதிகளில் அதிக வேலை வாய்ப்புகளை உருவாக்கும் நோக்கத்துடன் DIC நிறுவப்பட்டது. தற்போது DICs அந்தந்த மாநில நிதி விதிகளின் கீழ் செயல்படுகின்றன. DICs பின்வரும் இயற்கையின் சேவைகளை விரிவுபடுத்துகின்றன - (i) உள்;ர் வளங்களின் பொருளாதார விசாரணை (ii) இயந்திரங்கள் மற்றும் உபகரணங்கள் வழங்கல் (iii) மூலப்பொருட்களை வழங்குதல் (iv) கடன் வசதிகளின் ஏற்பாடு (v) சந்தைப்படுத்தல் (vi) தரமான உள்ளீடுகள் (vii) ஆலோசனை.

**மாநில நிதிக் கழகங்கள் (SFCs)**

சமச்சீரான வட்டார / பிராந்திய வளர்ச்சியை அடைவதற்கும், முதலீட்டை ஊக்குவிப்பதற்கும், வேலைவாய்ப்பை உருவாக்குவதற்கும், தொழில்துறையின் உரிமையாளர் தளத்தை விரிவுபடுத்துவதற்கும் அந்தந்த மாநிலங்களில் சிறு மற்றும் நடுத்தர நிறுவனங்களுக்கு நிதி மற்றும் ஊக்குவித்தல் போன்ற இதன் செயல்பாடுகள் முக்கியவையாகும். கால கடன்கள், பங்கு / கடனீடுகளுக்கு நேரடி சந்தா, உத்தரவாதங்கள், பரிமாற்ற விலைப்பட்டியல்கள் தள்ளுபடி மற்றும் தொடக்க (விதைபோன்ற பொருள் கொண்ட) மூலமுதலீடு (Seed Capital) உதவி மூலம் நிதி உதவி வழங்கப்படுகிறது. SFC-கள் ஐடிபிஐ மற்றும் எஸ்ஐடிபிஐ (IDBI and SIDBI) ஆகியவற்றின் மறுநிதியளிப்பு திட்டங்களை

செயல்படுத்துகின்றன, மேலும் பங்கு வகை உதவிகளையும் விரிவுபடுத்துகின்றன.

SFC-களில் கைவினைஞர்கள் மற்றும் எஸ்.சி / எஸ்.டி, பெண்கள், முன்னாள் இராணுவ வீரர்கள், உடல்ரீதியான சவால் போன்ற சிறப்பு இலக்கு குழுக்களுக்கு ஏற்றவாறு திட்டங்கள் உள்ளன, மேலும் சாலை போக்குவரத்து சிறிய துறைகள், தங்குமிடங்கள், சுற்றுலா தொடர்பான நடவடிக்கைகள், மருத்துவமனைகள் மற்றும் பலவற்றிற்கான நிதி உதவிகளையும் வழங்குகின்றன. SIDBI-இன் ஒற்றை சாளரத் திட்டத்தின் கீழ், SFC-கள் காலவரையறைகளுடன் பணி மூலதனத்தையும் விரிவுபடுத்துகின்றன, சரியான நேரத்தில் மூலதன வரம்புகளைப் பெறுவதில் SSI-கள் எதிர்கொள்ளும் சிரமங்களைத் தணிக்கும்.

குறிப்பு

**மாநில தொழில்துறை மேம்பாடு / முதலீட்டுக் கழகம் (SIDC/SIIC)**

இது நிறுவனங்கள் சட்டம், 1956-ன் கீழ் அமைக்கப்பட்டுள்ளது, இது மாநில அரசாங்கங்களின் முழு உரிமையாளர்களாக இருப்பதால், அந்தந்த மாநிலங்களில் வினையூக்கிகளாக செயல்படுகிறது. சாலைகள், மின்சாரம், நீர் வழங்கல், வடிகால் மற்றும் பிற வசதிகள் போன்ற வசதிகளுடன் வளர்ந்த இடங்களை வழங்கும் நிலங்களை அபிவிருத்தி செய்ய SIDC உதவுகிறது. கால முறை கடன்கள், பங்கு சந்தா மற்றும் விளம்பர சேவைகளின் மூலம் சிறிய அளவிலான துறைக்கு அவர்கள் உதவி வழங்குகிறார்கள். நாட்டின் 28 SIDC-களில் 11 SFC-களாகவும் செயல்படுகின்றன, மேலும் அவை இரட்டை செயல்பாட்டு IDC-கள் என்றும் அழைக்கப்படுகின்றன.

**மாநில சிறு தொழில்துறை மேம்பாட்டுக் கழகங்கள் (SSIDC)**

இது நிறுவனங்கள் சட்டம், 1956-ன் கீழ் நிறுவப்பட்டது, மாநில அரசு மேற்கொண்டுள்ளபடி, அந்தந்த மாநிலங்களில் உள்ள குறு, சிறு மற்றும் கிராமத் தொழில்களை வழங்குகிறது. (i) பற்றாக்குறையான மூலப்பொருட்களை கொள்முதல் செய்தல் மற்றும் விநியோகித்தல், (ii) SSI பிரிவுகளுக்கு வாடகை-கொள்முதல் அடிப்படையில் இயந்திரங்களை

குறிப்பு

வழங்குதல், (iii) தயாரிப்பைச் சந்தைப்படுத்தல் உதவி, (iv) தொழில்துறை வளாகங்களை நிர்மாணித்தல், அதனுடன் தொடர்புடைய உள்கட்டமைப்பு வசதிகள் மற்றும் அவற்றின் பராமரிப்பு (v) மாநில அரசின் சார்பாக தொடக்க (விதைபோன்ற பொருள் கொண்ட) மூலமுதலீடு (Seed Capital) உதவியை விரிவுபடுத்துதல் மற்றும் (vi) உற்பத்தி பிரிவுகளுக்கு மேலாண்மை உதவிகளை வழங்குதல்.

## 14.5 மாநில அரசுத் திட்டம்

### 14.5.1 தொழில்முனைவோர் மேம்பாட்டு நிறுவனம் (EDI)

சென்னையிலுள்ள தொழில்முனைவோர் மேம்பாட்டு நிறுவனம் (EDI) தமிழக அரசால் நவம்பர் 2001-ல் முதன்மையாக, மாநிலத்தில் தொழில்முனைவோர் பயிற்சி தேவைகளை பூர்த்தி செய்வதற்கும், தமிழ்நாட்டில் குறு, சிறு மற்றும் நடுத்தர நிறுவனங்களை மேம்படுத்துவதற்கும், ஒரு ‘இலாப நோக்கற்ற சங்கமாக’ அமைக்கப்பட்டது. தொடக்கத்திலிருந்து 31.03.2015 வரை, கிட்டத்தட்ட 1 லட்சம் உறுப்பினர்களுக்கு பயனளிக்கும் பயிற்சி திட்டங்களை EDI நடத்தியுள்ளது.

**அவற்றின் நோக்கங்கள் வருமாறு:**

1. தொழில்முனைவோர் பயிற்சி மூலம் குறு மற்றும் சிறு நிறுவனங்களை மேம்படுத்துதல்.
2. தங்கள் சொந்த நிறுவனத்தைத் தொடங்குவதற்கான லட்சியங்களைக் கொண்ட சாத்தியமான தொழில்முனைவோருக்கு உதவுதல்.
3. தொழில்முனைவோர் மேம்பாட்டிற்கான பன்முகப்படுத்தப்பட்ட உத்திகளை உருவாக்குதல்.
4. அரசாங்கத்தின் பல்வேறு திட்டங்களின் கீழ் பயிற்சித் திட்டங்களை நடத்துதல்.
5. திறன் மேம்பாட்டு பயிற்சி மூலம் வேலைவாய்ப்பை உருவாக்க வசதி.

குறிப்பு

தொழில்முனைவோர் மேம்பாடு என்பது வேலைவாய்ப்பு உருவாக்கம் மற்றும் சமமான பொருளாதார வளர்ச்சியின் முக்கிய அம்சமாகும். புதுமையான பயிற்சி நுட்பங்களைப் பயன்படுத்துதல், திறமையான ஆசிரியர்களைப் பயன்படுத்துதல், ஆதரவு மற்றும் ஆலோசனை மற்றும் தரமான கற்பித்தல் ஆகியவற்றின் மூலம் EDI-ன் நோக்கம் நிறைவேற்றப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

**14.5.2 பயிற்சி திட்டங்கள்**

மகளிர் உட்பட படித்த வேலையற்றோரின் பிரச்சினைகளுக்கு தீர்வு காண, ரூ.5 கோடியை 2013-14ஆம் ஆண்டில் EDI மூலம் வழங்க அரசு அனுமதித்தது. இந்த உதவியில் தொழில்முனைவோர் மற்றும் திறன் பயிற்சி திட்டங்களை வழங்க ரூ.4 கோடியும், EDI நிர்வாக செலவினங்களுக்கு ரூ.1 கோடியும் அடங்கும். மொத்தம் 3757 நபர்களுக்கு பல்வேறு திட்டங்களின் கீழ் பயிற்சி அளிக்கப்பட்டது.

**அ. தொழில் முனைவோர் மேம்பாட்டு திட்டம்**

தொழில்முனைவோர் மேம்பாட்டுத் திட்டம் (EDP) என்பது ஒரு பொருளாதார நடவடிக்கை அல்லது ஒரு நிறுவனத்தை உருவாக்குதல், திட்டமிடுதல் மற்றும் தொடங்குவது போன்றவற்றில் அத்தியாவசியமான ஒன்றில் பயிற்சி அளிப்பதை நோக்கமாகக் கொண்டுள்ளது. 2013-14ஆம் ஆண்டில், இந்த திட்டத்தின் கீழ் 736 பேருக்கு பயிற்சி அளிக்கப்பட்டது.

**ஆ. ஆசிரிய தொழில்முனைவோர் மேம்பாட்டு திட்டம்**

தொழில்முனைவோர் விழிப்புணர்வையும் மாணவர்களிடையே ஆர்வத்தையும் வளர்ப்பதற்குத் தேவையான திறன்களையும் அறிவையும் கொண்ட கல்லூரிகளின் கற்பித்தல் ஊழியர்களை சித்தப்படுத்துவதை நோக்கமாகக் கொண்டது இந்த திட்டம். 50 பொறியியல் கல்லூரிகளைச் சேர்ந்த 100 ஆசிரிய உறுப்பினர்களுக்கு 2014-15ல் பயிற்சி அளிக்கப்பட்டது. சென்னை, கோயம்புத்தூர், மதுரை, சேலம், திருச்சிரப்பள்ளி மற்றும் வேலூர் ஆகிய இடங்களில் பயிற்சி நடத்தப்பட்டது.

குறிப்பு

**இ. தொழில்முனைவோர் மற்றும் திறன் மேம்பாட்டு திட்டம்**

இந்த பயிற்சித் திட்டத்தின் நோக்கம், பயிற்சியாளர்களை நவீன தொழில்நுட்ப திறன்களுடன் சித்தப்படுத்துவதற்கும், திட்டத் தேர்வை எளிதாக்குவதற்கும் திறன் மேம்பாட்டை வழங்குவதாகும். இயந்திர கடை பயிற்சி, இரு சக்கர பழுது, வெல்டிங், புதுரக ஆடைகள், உணவு மற்றும் பழ பதப்படுத்துதல், வலைதள வடிவமைப்பு, வன்பொருள் பராமரிப்பு மற்றும் இணையதள பராமரிப்பு, தோல் பொருட்கள், வீட்டு மின் சாதனங்களுக்கு சேவை செய்தல் உள்ளிட்ட பல்வேறு வர்த்தகங்களில் பயிற்சி ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த திட்டத்தின் கீழ் 475 உறுப்பினர்கள் 2013-14ஆம் ஆண்டும் மற்றும் 400 உறுப்பினர்கள் 2014-15ஆம் ஆண்டும் பயனடைந்தனர்.

**ஈ. தொழில்நுட்ப அடிப்படையிலான தொழில்முனைவோர் மேம்பாட்டு திட்டம்**

குறிப்பிட்ட தொழில்நுட்பப் பிரிவுகளில் அதாவது தோல், மின்னணுவியல் மற்றும் தகவல் தொடர்பு, சூரிய ஆற்றல், வாகன தொழில்நுட்பம் போன்றவற்றில் பயிற்சி அளிக்கப்பட்டது. இந்த திட்டத்தின் கீழ் 2013-14ஆம் ஆண்டில் 206 உறுப்பினர்களுக்கு பயிற்சி அளிக்கப்பட்டது.

**உ. வேளாண் மேம்பாட்டு வளர்ச்சித் திட்டம்**

பயிற்சித் திட்டத்தின் நோக்கம் தொழில்நுட்பம் மற்றும் மேலாண்மை உள்ளீடுகளால் வேளாண் துறையில் விரிவாக்கப்படுவதற்கான முயற்சிகளுக்கு துணைபுரிவதும், ‘வேளாண்தொழில்முனைவோர்’ ஊக்குவிப்பதும் ஆகும். இந்த திட்டத்தின் கீழ் 117 விவசாய பட்டதாரிகளுக்கு கோயம்புத்தூர் தமிழ்நாடு வேளாண் பல்கலைக்கழகம் (2 தொகுதிகள்), திருச்சிராப்பள்ளி, மதுரை மற்றும் 2013-14ஆம் ஆண்டில் சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக்கழகம் மூலம் பயிற்சி அளிக்கப்பட்டது.

**ஊ. தொகுதி / வட்டார விழிப்புணர்வு திட்டம்**

தொகுதி / வட்டார விழிப்புணர்வு திட்டம் என்பது மாநிலத்தில் அலுமினியம், அரிசி ஆலை, வாகன உதிரிபாகங்கள், இயந்திர பம்புகள், ஜவுளி, பாதுகாப்பு போட்டிகள், முந்திரி மற்றும் நாணயத் தொழில் ஒருங்கிணைப்புகளில் உள்ள நிறுவனங்களின் வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டது. இந்த திட்டம் அவர்களின் செயல்பாட்டு செயல்திறனை மேம்படுத்துவதோடு உலகளாவிய போட்டியை எதிர்கொள்வதில் அவர்களைத் தக்க வைத்துக் கொள்ள உதவும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. 2013-14ஆம் ஆண்டில் ஒருங்கிணைந்த விழிப்புணர்வு திட்டங்களில் 360 தொழில்முனைவோர் பங்கேற்றனர்.

**எ. தொழில்முனைவோர் மேம்பாட்டை நிறுவுதல்**

கல்லூரிகளில் உள்ள பாடப்பிரிவுகள் மாநிலம் முழுவதும் 50 உயர் கல்வி நிறுவனங்களில் தொழில்முனைவோர் மேம்பாட்டுப் பிரிவுகளை அமைக்கும் திட்டத்தை EDI செயல்படுத்தியுள்ளது. இந்த திட்டத்தை ஆதரிக்க ஒவ்வொரு நிறுவனத்திற்கும் ரூ.1 லட்சம் மானியம் வழங்கப்பட்டது. EDC-க்கள் மாணவர்களிடையே தொழில்முனைவோர் கலாச்சாரத்தை மேம்படுத்துவதற்கான நடவடிக்கைகளை செயல்படுத்தும்.

**ஏ. மகளிர் தொழில் முனைவோர் மேம்பாட்டு திட்டங்கள்**

(WEDP) என்பது பொருளாதார நடவடிக்கைகளைத் திட்டமிடுவதற்கும், தொடங்குவதற்கும், செயல்படுத்துவதற்கும், சொந்த நிறுவனங்களை மேம்படுத்துவதற்கும் பெண்களுக்கு பயிற்சி அளிப்பதை நோக்கமாக கொண்டுள்ளது. 2013-14ஆம் ஆண்டில் 375 மகளிர் பயிற்சி பெற்றனர், மேலும் அவர்களுக்கு கிடைக்கும் வாய்ப்புகள் மற்றும் நிதி உதவி குறித்து கல்வி கற்பிக்கப்பட்டது. மகளிர் தொழில்முனைவோர் தங்கள் சொந்த தொழில் முயற்சிகளைத் தொடங்கவும், நிர்வகிக்கவும் செயலூக்கம் பெற்றனர்.

**ஐ. மகளிர் தொழில்முனைவோர் மற்றும் திறன் மேம்பாட்டு திட்டம் (WESDP)**

ஒரு புதிய தொழில்முனைவோருக்குத் தேவையான அடிப்படை தொழில்முனைவோர் பங்கேற்பிற்கு மேலதிகமாக, தேர்ந்தெடுக்கப்பட்ட

குறிப்பு

வர்த்தகங்களில் பாரம்பரிய மற்றும் பாரம்பரியமற்ற செயல்பாடுகளில் திறன் பயிற்சி பெண்களுக்கு வழங்கப்பட்டது. 2014-15ல் மொத்தம் 350 மகளிர் பயிற்சி பெற்றனர்.

**ஓ. வழிகாட்டல் பயிற்சி**

புதிய தொழில்முனைவோருக்கு பொருளாதாரத்தில் சந்தை போக்குகள் தொடர்பான சரியான நேரத்தில் தகவல்களைப் பெறுவதற்கும், நிதி நிறுவனங்களை எவ்வாறு அணுகுவது என்பதையும், அரசாங்கத்தின் செயல்கள், விதிகள் மற்றும் ஒழுங்குமுறைகள் குறித்த புதுப்பிக்கப்பட்ட அறிவையும் புரிந்துகொள்ள வழிகாட்டல் பயிற்சி வழங்கப்படுகிறது. கோவை, ஈரோடு, மதுரை, சென்னை, ஓசூர், சேலம், அம்பத்தூர், கிண்டி, திருச்சிராப்பள்ளி மற்றும் திருப்பூர் ஆகிய இடங்களில் வழிகாட்டல் மையங்களை அமைப்பதற்காக ஒரு சங்கத்திற்கு ரூ.1 லட்சம் என்ற விகிதத்தில் பத்து தொழில்துறை சங்கங்களுக்கு ரூ.10 லட்சத்தை EDI வழங்கியுள்ளது.

### 14.5.3 வேலையற்ற இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பை உருவாக்கும் திட்டத்தின் (UYEGP) கீழ் பயிற்சி

இந்த திட்டத்தின் கீழ், 2014-15ஆம் ஆண்டில் 4975 வருங்கால தொழில்முனைவோருக்கு 7 நாள் பயிற்சி அளிக்கப்பட்டுள்ளது.

### 14.5.4 பிரதமரின் வேலைவாய்ப்பை உருவாக்கும் திட்டத்தின் (PMEGP) கீழ் பயிற்சி

இந்த திட்டத்தின் கீழ், 2014-15ஆம் ஆண்டில் 1829 தொழில் முனைவோருக்கு 10 நாள் பயிற்சி அளிக்கப்பட்டுள்ளது.

### 14.5.5 புதிய தொழில்முனைவோர் மற்றும் நிறுவன மேம்பாட்டுத் திட்டம் (NEEDS)

இந்த திட்டத்தின் கீழ், 2014-15ஆம் ஆண்டில், முதல் தலைமுறை தொழில்முனைவோருக்கு மாநிலம் முழுவதும் பல தொகுதிகளில் 25 நாட்கள் பயிற்சி திட்டங்கள் நடத்தப்பட்டன, மேலும் 811 நபர்களுக்கு பயிற்சி அளிக்கப்பட்டது.

குறிப்பு

### 14.5.6 EDI-ல் மகளிர் தொழில்முனைவோர் மேம்பாட்டுப் பிரிவு

EDI-ல் நடத்தப்படும் பெண்களுக்கான பயிற்சித் திட்டங்களை கண்காணிக்க EDI-ல் மகளிர் தொழில்முனைவோர் மேம்பாட்டுப் பிரிவு நிறுவப்பட்டுள்ளது. மகளிர் தொழில்முனைவோருக்கு அவர்களின் தொழில்நுட்ப திறன்களை மேம்படுத்தவும், சுய வேலைவாய்ப்புக்காக பெண்களுக்கு தொழில்முனைவோர் பயிற்சி அளிக்கவும், நிர்வாக திறனை மேம்படுத்தவும், பல்வேறு திட்டங்கள் மூலம் தொழில்முனைவோர் உணர்வை ஊக்குவிக்கவும் இந்த பிரிவு வழிகாட்டுகிறது. கல்லூரி மாணவர்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்காக மகளிர் தொழில்முனைவோர் மேம்பாட்டுப் பிரிவு, ஸ்ரீரங்கம், சிதம்பரம் மற்றும் மதுரை ஆகிய கல்லூரிகளில் மூன்று மாநாடுகளை நடத்தியுள்ளது.

### 14.5.7 EDI-ல் சூரியசக்தி உபகரண பராமரிப்பு மற்றும் பயன்பாடுப் பயிற்சி

இது தமிழக மகளிர் மேம்பாட்டுக் கழகத்துடன் இணைந்து தொடங்கப்பட்டுள்ளது, சூரிய ஆற்றல் சாதனங்கள் மற்றும் உபகரணங்களின் பயன்பாடு மற்றும் பராமரிப்பு குறித்து கிராமப்புற சுய உதவிக்குழுவின் (SHG) 4000 பெண்களுக்கு பயிற்சி அளிக்கும் திட்டத்தை மேற்கொண்டது. இந்த திட்டங்கள் மாநிலம் முழுவதும் உள்ள அனைத்து தொகுதிகளிலும் செயல்படுத்தப்பட்டுள்ளன.

### 14.5.8 இந்திய அரசின் குறு, சிறு மற்றும் நடுத்தர நிறுவனங்களுக்கான தேசிய நிறுவனத்தின் (NIMSME) EDP மற்றும் ESDP பயிற்சிக்கான நிதியுதவி

இது இந்திய அரசின் எம்.எஸ்.எம்.இ (MSME) அமைச்சகத்தின் கீழ் உள்ள ஒரு ஒருங்கிணைப்பு மையம் ஆகும், இது 2014-15ஆம் ஆண்டில் 395 வேட்பாளர்களுக்கு தொழில்முனைவோர் மேம்பாட்டு திட்டங்கள் மற்றும் தொழில்முனைவோர் மற்றும் திறன் மேம்பாட்டு திட்டத்தை அனுமதித்தது. இம்மையத்தில் 30 உறுப்பினர்களுக்கு நாகரீக ஆடை வடிவமைத்தல், 30 உறுப்பினர்களுக்கு இரண்டு சக்கர வாகன பழுதுபார்த்தல் மற்றும் பராமரிப்பு, 30 உறுப்பினர்களுக்கு தோல்

குறிப்பு

பொருட்கள், 30 உறுப்பினர்களுக்கு கணினி பராமரிப்பு, 30 உறுப்பினர்களுக்கு TIG / MIG வெல்டிங் பயிற்சி, 30 உறுப்பினர்களுக்கு குளிர்பதன மற்றும் குளிர்சாதன பராமரிப்பு ஆகியவற்றை உள்ளடக்கிய 395 உறுப்பினர்களைக் கொண்ட 215 உறுப்பினர்களுக்கான தொழில்முனைவோர் மேம்பாட்டு திட்டப் பயிற்சி வழங்கப்பட்டது. EDI-ன் பயிற்சியாளர்களுக்கு ஒரு திறமைக்கான நிகழ்ச்சி நடத்தப்பட்டது.

### 14.5.9 கல்லூரிகளில் தொழில்முனைவோர் விழிப்புணர்வுத் திட்டம்

2014-15ஆம் ஆண்டில், 62 அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரிகள் மற்றும் 50 பொறியியல் கல்லூரிகள் உட்பட மாநிலத்தின் 112 கல்லூரிகளில் தொழில்முனைவோர் விழிப்புணர்வை ஏற்படுத்தும் திட்டத்தை EDI அறிமுகப்படுத்தியுள்ளது. தேர்ந்தெடுக்கப்பட்ட கல்லூரிகளில் 30000 மாணவர்கள் பயனடைவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த திட்டம் 3 கட்டங்களாக நடத்தப்பட்டு, தமிழகத்தின் ICT பயிற்சி நிறுவனத்துடன் இணைந்து செயல்படுத்தப்பட்டு வருகிறது. எதிர்காலத்திலும் இதுபோன்ற திட்டத்தை தொடர உத்தேசிக்கப்பட்டுள்ளது. 2014-15ஆம் ஆண்டில், 112 கல்லூரிகளில் முதல் கட்டம் மேற்கொள்ளப்பட்டது. இந்த திட்டம் 2015-16ல் நிறைவடையும்.

### 14.5.10 பொறியியல் கல்லூரிகளில் செயற்கைமுறை தொழில் நுட்பகளுக்கான வழிகாட்டுதல் மற்றும் ஆதரவு

மாநிலத்தில் உள்ள பொறியியல் கல்லூரிகளில் தொழில்நுட்ப செயற்கைமுறை நடவடிக்கைகளை நிறுவுவதற்கும் செயல்படுவதற்கும் EDI ஒரு முயற்சியைத் தொடங்கியுள்ளது. மாநில / மத்திய அரசின் திட்டங்களின் கீழ் மாநிலத்தில் நிறுவப்பட்ட இத்தகைய காப்பகங்களுக்கு தொழில்நுட்ப, நிதி மற்றும் பிற ஆலோசனை உதவிகளை எளிதாக்கும் வகையில் ஒரு ஒருங்கிணைந்த மையமாக EDI செயல்படும் என்று கருதப்படுகிறது.

குறிப்பு

### 14.5.11 செயல்திறன் / உற்பத்தித் திறனை மேம்படுத்துவதற்கான முயற்சிகள்

செயல்திறன் மற்றும் உற்பத்தித்திறனை மேம்படுத்துவதற்காக மாநிலத்தில் தற்போதுள்ள தொழில்துறை தொடர்புகளுக்கிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த தேசிய உற்பத்தித்திறன் குழுவுடன் இணைந்து பணியாற்றுவதற்கான முயற்சிகளை EDI தொடங்கியுள்ளது. 2014-15ஆம் ஆண்டில், கும்பகோணம் (எஃகு உற்பத்தி ஒருங்கிணைப்பு), சென்னை (அச்சுப் பதிவக உற்பத்தி ஒருங்கிணைப்பு), சிவகங்கை (கயிற்றுத் தொழில் உற்பத்தி ஒருங்கிணைப்பு) மற்றும் தூத்துக்குடி (உப்பு உற்பத்தி ஒருங்கிணைப்பு) ஆகியவற்றிற்குத் தேவையான உற்பத்தி குறித்த விழிப்புணர்வு திட்டங்கள் நடத்தப்பட்டன. EDI தேவையான சேவைகளை வழங்கும்.

பிற ஒருங்கிணைப்புகளில் உள்ள தொழில்களுக்கான நிதிகளை அணுகவும், உற்பத்தித்திறன் மற்றும் செயல்திறனை மேம்படுத்தவும் இத்திட்டத்தின் செயல்பாடுகள் உதவும்.

## 14.6 உங்களுடைய முன்னேற்றத்தை சரிபார்க்கவும்

1. முத்ரா திட்டம் பற்றி சிறு குறிப்பை வரைக?
2. சி.எல்.சி.எஸ்.எஸ் (CLCSS) என்றால் என்ன?
3. எம்-சிப்ஸ் (M-SIPS) என்றால் என்ன?
4. பெண் தொழில்முனைவோருக்கான திட்டங்களை சுருக்கமாக விளக்குங்கள்?

## 14.7 குறுகிய பதில்களுக்கான கேள்விகள்

1. இந்தியாவில் மகளிர் தொழில்முனைவோருக்காக செயல்படுத்தப்பட்ட திட்டங்கள் யாவை?
2. தொழில்முனைவோர் மேம்பாட்டு நிறுவனத்தின் (EDI) நோக்கங்களை விவரிக்கவும்.

குறிப்பு

3. இந்தியாவில் தேசிய விருது திட்டம் பற்றி கூறவும்.
4. பிரதமரின் வேலைவாய்ப்பை உருவாக்கும் திட்டத்தின் (PMEGP) நோக்கங்கள் என்ன?
5. EDI-ல் மகளிர் தொழில்முனைவோர் மேம்பாட்டு பிரிவைப் பற்றி ஒரு சிறு குறிப்பை வழங்கவும்.

## 14.8 நீண்ட பதில்களுக்கான கேள்விகள்

1. பிரதமரின் வேலைவாய்ப்பு உருவாக்கும் திட்டத்தை (PMEGP) பற்றி விரிவான பகுப்பாய்வு செய்யுங்கள்.
2. இந்தியாவில் மிகவும் சாத்தியமான பத்து தொடக்கத் திட்டங்களைப் பற்றி விவாதிக்கவும்.
3. ராஜீவ் காந்தி உதயமி மித்ரா திட்டத்தை விவரிக்கவும்.
4. தொழில்முனைவோர் மேம்பாட்டு நிறுவனத்தின் (EDI) கீழ் செயல்படும் பயிற்சி திட்டங்களை விளக்குங்கள்.

## 14.9 உங்களுடைய முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. **முத்ரா** (MUDRA) - மைக்ரோ யூனிட்ஸ் டெவலப்மென்ட் அண்ட் ரீ∴பைனன்ஸ் ஏஜென்சி அல்லது முத்ரா, குறு மற்றும் சிறு நிறுவனங்களுக்கு நிதி வழங்க இந்திய அரசாங்கத்தின் ஒரு முக்கிய திட்டமாகும். கடன் பெற பிணையம் / அடைமானம் தேவையில்லை. உற்பத்தி, வர்த்தகம் மற்றும் அதனுடன் தொடர்புடைய விவசாய சேவைகளுக்கு இது பொருந்தும். இதில் 3 தொகுதிகள் உள்ளன, ஷிஷு (50,000 வரை கடன்), கிஷோர் (50,000 முதல் 5 லட்சம் வரை கடன்) மற்றும் தருண் (5 லட்சம் முதல் 10 லட்சம் வரை கடன்).

2. **சி.எல்.சி.எஸ்.எஸ்** (CLCSS) – MSME-ன் கீழ், கடன் இணைக்கப்பட்ட மூலதன மானியத் திட்டம் என்பது அதிநவீன உபகரணங்களுடன் தங்கள் இயந்திரங்களை மேம்படுத்திய உற்பத்தி பிரிவுகளுக்கு மானியத்தை வழங்குவதற்கான ஒரு வழியாகும். இந்தத்

குறிப்பு

திட்டம் உற்பத்தி அலகுகளை சமீபத்திய உபகரணங்களை வாங்க ஊக்குவிப்பதற்கும், தொழில்நுட்பத்தை மேம்படுத்துவதற்கும் உதவுகிறது.

3. **எம்-சிப்ஸ்** (M-SIPS) - மாற்றியமைக்கப்பட்ட சிறப்பு ஊக்கத் தொகுப்பு திட்டம் தொழில்நுட்ப வன்பொருள், ஐஓடி (IoT), தானியங்கி, புதுப்பிக்கத்தக்க மற்றும் புதுப்பிக்க முடியாத எரிசக்தி ஆதாரங்கள், நானோ தொழில்நுட்பம், பசுமை தொழில்நுட்பம் மற்றும் விண்வெளி மற்றும் பாதுகாப்புத் தொழில்கள் ஆகிய துறைகளில் உற்பத்தி மற்றும் மின்னணு பிரிவுகளுக்கு மூலதன மானியங்களை வழங்குகிறது. இந்த திட்டத்தின் கீழ், உற்பத்தி மற்றும் மின்னணுவியல் துறையில் வணிக பிரிவுகளுக்கு, SEZ-ல் 20% மூலதன மானியத்திற்கும், SEZ அல்லாதவற்றில் 25% வழங்கப்படுகிறது.

4. **அ. மஹிலா உத்யாமி (MUY)** : SSI -துறையில் திட்டங்களைத் தொடங்க விரும்பும் மகளிர் தொழில்முனைவோருக்கு தொடக்க (விதைபோன்ற பொருள் கொண்ட) மூலமுதலீடு (Seed Capital) உதவியை வழங்குவதற்காக ஐ.டி.பி.ஐ (IDBI) இந்த திட்டத்தின் கீழ் ரூ.5 கோடி நிதிய மூலதனத்துடன்(Corpus Fund) சிறப்பு நிதியை அமைத்துள்ளது. இந்த திட்டத்தை SIDBI செயல்படுத்துகிறது. 51% பங்குகளை மகளிர் நிர்வகிக்க வேண்டும்.

**ஆ. ஸ்ரீ சக்தி தொகுப்பு (SBI)**: இந்த திட்டத்தின் கீழ், ஈடிபிஎஸ் பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்டு மகளிர் தொழில்முனைவோருக்காக நடத்தப்படுகிறது. மேலும், இணை பாதுகாப்பு இல்லாமல் ரூ.25,000 வழங்கப்படுகிறது.

## புத்தகக் குறிப்புகள்

1) தொழில்முனைவோர் மேம்பாடு, டாக்டர் C.B. குப்தா, டாக்டர் N.P. சீனிவாசன்.

2) தொழில்முனைவின் மேம்பாடு, டாக்டர் நடராஜன், எவரெஸ்ட் பதிப்பகம், புது தில்லி.

குறிப்பு

3) தொழில்முனைவோர் மேம்பாடு, டாக்டர் SS. காங்கா, S. சந்த் & கம்பெனி லிமிடெட், புது தில்லி.

4) தொழில்முனைவோர் மேம்பாடு, டாக்டர் L. ரெங்கராஜன், ஸ்ரீ ரெங்கா பப்ளிகேஷன்ஸ், இராஜபாளயம்.

5) தொழில்முனைவோர் மேம்பாடு மற்றும் மேலாண்மை, N. அஜித் குமார், எவரெஸ்ட் பதிப்பகம், ஹைதராபாத்.

6) www.investopedia.com

7) www.businessmanagementideas.com

8) www.yourarticlelibrary.com

முதுகலை - பொருளாதாரம்

இரண்டாமாண்டு - நான்காம் பருவம்

தாள்: 362 43

# தொழில்முனைவோர் மேம்பாடு




## அழகப்பா பல்கலைக்கழகம்



தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதியும்
மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப்
பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது



காரைக்குடி - 630003

தொலைநிலைக்கல்வி இயக்ககம்

20CUS00647